

ஓவியம் : சிதம்பரகிருஷ்ணன்

# கசடதபற

24

செப்டம்பர் 1972

30 காசு

# ஒளிப்பறவை*

ஒளிப் பறவையின் ஆசிரியர் ஒரு கல்லூரியில் பணியாற்றிவரும் தமிழ்ப் பேராசிரியர். இதைக் குறிப்பிடுவதற்குக் காரணம், ஒரு கவிஞர் என்ன உத்தியோகம் பார்க்கிறார் என்பதைக் கருத்தில் கொள்வதற்காக அல்ல. இன்று கவிதை எழுதுபவர்களில், முறையாகத் தமிழ் படித்தவர்கள் சிலர் இருப்பதும், அவர்களின் கவிதை பழைய புலவர்களின் கவிதைகளிலிருந்து எப்படி வேறுபடுகிறது என்பதைப் பார்க்கவும் தான் குறிப்பிடப்படுகிறது. பாரதிதாசனின் நல்லாசியுடன் கவிதை உலகுக்கு அறிமுகமானவர் சிற்பி என்று பின்னட்டைப் படத்தின் அடிக்குறிப்பு கூறுகிறது. ஆனால் கவிதைகள் பாரதிதாசனின் நிழலாட்டம் இல்லாமல் உள்ளன என்பதைமுதலிலேயேசொல்லிவிடவேண்டும். தனது இறுதிக்காலம் நெருங்கும் சமயம் தமிழ் நாட்டில் உள்ள எல்லாக் கவிஞர்களுக்கும் பாரதிதாசன் நல்லாசி கொடுத்தவர் என்பது ஊரறிந்த விஷயம். சிற்பிக்குக் கிடைத்த நல்லாசியும் அந்த அளவுக்குத் தான் என்பதில் சந்தேகமில்லை.

பாரதிதாசனின் பாதிப்பு இல்லாது போனாலும், சிற்பிக்கு அதற்கு ஈடாகவேறு பாதிப்புக்கள் உள்ளன. அவருடைய மரபான செய்யுள் நடையும், குறைவான சிந்தனையும் அவரைத் தமிழாசிரியராகவே பெரிதும் காட்டப் பயன்படுகின்றன.

செய்யுள் நடையில் கவிதை எழுதுவது ஒன்றும் முறைகேடு அல்ல என்றாலும், தமிழாசிரியர்கள் கவிதை எழுதும்போது செய்யுள் நடைக்கு என்னவோ ஆகிவிடுகிறது. நடை தளர்ந்து போகிறது. இருப்புக் கொள்ளாமல் சொல் தவிக்கிறது. சொற்களுக் கிடையில் அடைமொழி பருக்கைபோல நிற்கிறது. பெரும்பாலான செய்யுள் நடைக் கவிதைகளின் அம்சமாக அவை இருந்தபோதிலும் சிற்பி அவற்றிலிருந்து விடுபட்டிருக்கிறார்— முற்றிலும் அல்ல. ஒரு மரபான கவிஞனிடத்திலிருந்து சிற்பி எந்த விதத்தில் மாறுபடுகிறார் என்பது சொல்வது கடினம். சமகாலத்திய பொருள்களை, நிலவரங்களைப் பாடினால் போதுமா? சிற்பியின் இந்த முப்பது கவிதைகளில் எதுவும் வலிந்து எடுத்துக் கொள்ளப் பட்டது என்று சொல்லமுடியாது. ஆனால் கவிதைகளாவதில் அவை மிகவும் சங்கடப் படுகின்றன.

சிற்பிக்குச் செய்யுள் நடையில் உள்ள ஈடுபாட்டுக்கு அடையாளமாக மட்டுமே சில கவிதைகள் இந்தத் தொகுதியில் காணப்படுகின்றன. 'கண்ணன் பிறக்கிறான்', 'மாணவப்புரவி', 'கோடை' ஆகிய கவிதைகள் அப்படிப் பட்டவை. இவற்றில் செய்யுள், யதார்த்தப் பார்வையின் திராணியில்லாத கவிதையை எளிதாக டிஸ்மிஸ் செய்து விடுகிறது. ஆனால், கண்ணன் பிறக்கிறானில் பாரதியாருக்குப் பிறகு ஓரளவு சுருதி சுத்தமான செய்யுளைக் கேட்கிற அதிசயம் 8-10 பத்திகளில் கிடைக்கிறது. 'கோடை'யில் சப்தம் சூழ்நிலையைத் தரத் தயாராயிருந்த போதிலும் கற்பனை பற்றாமல் தோல்வியுறுகிறது. ஆனால் இவற்றிலிருந்து சிற்பி விடுபடுவார் என்பதற்குச் சான்றாகச் சில பகுதிகள் உள்ளன.

என்னைத் தெரிகிறதா?
இளையமுகம் தெரிகிறதா?
அன்புக்குக் காத்திருக்கும்
அடியவளைத் தெரிகிறதா?

மேற்கண்ட பத்தியில் ஒரு யதார்த்த அணுக்க நிலையும், குழைவான சந்தமும் கொடுக்கிற உற்சாகத்தை நிலைநிறுத்த சிற்பியால் இயலவில்லை என்றாலும் கவிதை படிப்பதற்கு நன்றாக இருக்கிறது.

சிற்பியின் இந்த முப்பது கவிதைகள் நமக்குச் சிறப்பாக எதுவும் தரவில்லை என்றாலும் அலுப்பூட்டவில்லை.

'பாப்பாவின் கேள்வி', கனவு வாங்கலையோ ஒரு காதல் கதை முதலிய கவிதைகள் மறுபடியும் படிக்கத் தூண்டின. செய் முறையில் இவை கொஞ்சம் சிக்கலானவை. ஆனால், சிற்பி செய்து பார்த்திருக்கிறார்.

—ஞானக்கூத்தன்.

---

* ஒளிப் பறவை: (கவிதைகள்): சிற்பி பாலசுப்ரமணியம் (பக்கங்கள் 126: விலை ரூ. 3-00.) கிடைக்குமிடம்: மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

## மூன்று மட்டுமே

1

எனக்கும் தமிழ்தான் மூச்சு
ஆனால்
பிறர் மேல் அதைவிடமாட்டேன்.

2

ஆற்காட்டுச் சீமையிலே
மலையெல்லாம் விரல்போல
அந்த விரல் மோதிரத்தை
யார் திருடிப் போனார்கள்?

3

தாமரைப் பூவே
இணையடி ஒன்று
உன்மேல் உண்டென
சொல்லப்பட்டதே
அந்தத் திருவடி அழகுகள் எங்கே?
குளத்தில் எங்கும்
விட்டுவிட் டாயா?
நீருக்கடியில் நீந்தினால்
ஆளைப் பிடித்தேனமுக்கிக்
கொள்கிறாய்?

—ஞானக்கூத்தன்

---


# கசடதபற

(ஒரு வல்லின மாத ஏடு)
தனி இதழ்: 35 காசு
ஆண்டுச் சந்தா: ரூ. 4/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7ந் தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகளை அனுப்பிவைக்க வேண்டும்.

ஆசிரியர்: 'கசடதபற'
1 தேவடி தெரு
சென்னை 4


## நஷ்ட ஈடு...

ஈக்களுடன் மட்டுமே
தூங்கும்—
அனாதைப் பிணங்களின்
உலகில்,
இந்தப் பைத்தியக்காரியை
(அவளையணிந்த) - சில
ஆவியற்ற பூக்களும்,
மொய்த்திருக்கின்றன,

—கலாப்ரியா

வாழ்க்கைக் கிணற்றின்
மோக நீரில்
மோதுகின்ற
'பக்கெட்டு' நான்.
பாசக் கயிற்றால்
சுருக்கிட்டு
இழுக்கின்ற
தூதன் யார்?

## இவள்

என் மன மேடையேறி
கற்பிழந்த மங்கையர்
மண மாகிச்சினையான பின்
என் மணமேடை நாயகி
எவன்
மன மேடைக் காதலியோ?

## நாளை நமக்கும்...

பொரி கடலை
பசி தீர்க்கும்
சிறு காசு
சுகம் சேர்க்கும்
பூவிதழ்கள்
வழி காட்டும்,

—எஸ். கே. ஆத்மாராம்

# நேர்க் கோடுகளும் கோணல் கோலங்களும்

எம். சுப்பிரமணியன்

எதிர்காற்று உடம்பைச் சிராய்த்துக் கொண்டு சீற இவன் மிதித்தான். பனையும், தென்னையும், ஆலும் வேலும், லைட் கம்பமும் கனவில் வரும் மாயா ரூபங்களாய்ச் சிதைந்து, ரூபமற்று சிதறிப் பின் தங்கின. நீட்டிவிட்ட கருப்புக் கோடாய் மினுக்கிற்று சாலை. ஒரு ஈ காக்கை இல்லை. இவன் வேகமாக, மிக வேகமாக மிதித்தான். துரித கதியில் கால்கள் ஒரு வட்டமைப்பில் இயங்கின. ஸீட்டில் இருந்தபடி மிதித்தால் வேகம் கூடாது என்று பாரில் நின்ற வண்ணம் மிதித்தான்.

அலுப்பும் அதிருப்தியும் மீற மறுபடியும் ஸீட்டிலிருந்தபடி இயங்கினான். சற்றுநேரம் பார். சற்று நேரம் ஸீட்..ஸீட்...பார் பார் ஸீட். ஸீட் பார். வேகம் வேகமெனப் பறந்தது மனது. வேகமாக இன்னும் வேகமாக, மிக வேகமாக மிதித்தான். அப்படியும் தணியவில்லை. வெறி. அசுரவெறி. குஷி, எக்காளம். ஆவேசம். போதை. எல்லாம் தன் காலடியில் என்ற மிதப்பு. சுமையெல்லாம் குறைந்து, இந்த உலக பந்தமே இல்லாமல், உடம்பே பூஞ்சிறகாகி அதுவும் இல்லையாய்க் காற்றோ காற்றாய்க் கரைவதுபோல ... விடாதே...ம்ம் அழுத்து அழுத்து. ஒரு திருப்பம். கண்சிமிட்டும்போது. 'டர்ர்ர்ற்' — தார்ரோட்டின் கருத்த வயிற்றில் ஆழ உழுதவடு. வண்டி ஒரு முறை அதிர்ந்து துள்ளிற்று. இவன் நசுங்கிக் கூழாகிக் கிடந்தான்.

அதிர்ந்து கண்களைத் திறந்தான். எதிர்ச்சாரியில் அந்தச் சைக்கிள் நின்று கொண்டிருந்தது. உடம்பை மேலும் கீழுமாகப் பார்த்தான் நம்பிக்கை இல்லாதவனாய். தொப்பலாக வியர்த்திருந்தது. நாக்கு வரண்டிருந்தது. அப்பா ஆ என்ன வேகம். உடம்பைச் சிலிர்த்தது. திண்ணையில் காலைத் தொங்கப் போட்டபடி வெகுநேரம் பார்த்துக் கொண்டிருந்தான்; அது புதுசு. இன்ஸ்டால்மென்டில் வாங்கியது. எதிர் வீட்டு ராயர் ஒரு வாரத்திற்கு முன்புதான் அதைக்கொணர்ந்து நிறுத்தினார். ராயருக்கு அதில் அலாதிப் பெருமை. அடிக்கடி அதைத் தொட்டுத் தடவிப் பார்ப்பார். முன்னே, பின்னே, தூரே பக்கவாட்டில் குனிந்து என்று பல கோணங்களில் பார்த்து ரசித்து சிலாகித்துக் கொள்வார்.

அடிக்கடி எண்ணெய் போடுவார். எதையாவது திருகுவார். கண்ணாடியை அப்படியும் இப்படியும் திருப்பி வைப்பார். டயரை அமுக்கி, பெல்லை அடித்து பெடலை மிதித்துத் திருப்திபட்டுக்கொள்வார். இரண்டு வேளையும் தவறாமல் துடைப்பார். கழுத்து நரம்பு புடைத்து வீங்கமேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க அதைத் தானே தூக்கி வைப்பார். யாராவது அதனருகில் வந்து நின்றால் திட்டுவார். நாலு பேச்சில் மூன்று பேச்சு அதைப்பற்றித் தான்.

"அதுவே பாருங்கோ எல்லாம் சேத்து நானூத்தம்பதாகும்னான். சரிடான்னேன் ... என்ன தகராறுன்னா ஏதாவது ஸ்பேர் பார்ட்ஸ் வேணும்னா இங்க ஒண்ணும் கெடைக்காதாம். ஃபாரினுக்குத்தான் ஓடணுமாம். அதெ நெனச்சாத்தான் யோசனையா இருக்கு. என்ன பண்றது? பேய்க்குவாக்கப் பட்டாச்சு, முருங்க மாத்தில் ஏறமாட்டேன்னா முடியுமோ?"—என்று அலுத்துக் கொள்வார் ஒருவரிடம்.

இதற்கு எதிரிடையாகத் தான் அதைத் தவமிருந்து அடைந்ததாகப் பேசுவார் வேறு ஒருவரிடம். காலைச் சுற்றிக்கொண்டுவிட்ட சனியனாக வர்ணிப்பார் மற்றொருவரிடம். ராயர் சைக்கிளில் ஏறுவதே அலாதி. பையன்கள் இருவரும் பக்கத்துக்கு ஒருவராய் நிற்பார்கள். அவருடைய மனைவி கையில் டிபன் பாக்ஸ் அடங்கிய வலைப்பையுடன் அவர் முகத்தைப் பார்த்தபடி நிற்பாள். பையன்களில் ஒருவன் கேரியரைப் பிடித்துக் கொள்வான். ஒரு காலை அழுத்தமாகக் கீழே ஊன்றி சைக்கிளைச் சாய்த்து மற்றொரு காலை அகட்டிப் போட்டு ஒரு அரைவட்டம் அடித்து ஏறுவார். பஞ்சகச்சம விலகி அவர் உட்காருவதை உள்ளூர ஒரு அருவருப்புடன் ஆனால் ஆசையோடு தவறாமல் இவன் பார்த்திருக்கிறான்.

இவன் அப்பாவிடமும் சைக்கிள் இருந்தது. இரண்டு தலைமுறை வண்டி அது. அப்பா ஒருத்தரால்தான அதில் போகமுடியும். மற்றவர்கள் போனால் அதோகதிதான். இடப்பக்கம் திருப்பினால் வலப்பக்கம்போகும். திருப்பினால் குடையடிக்கும். அப்பா கையில் மட்டும் சாதுவாய் மந்திரத்திற்குக் கட்டுப்

## சிறப்பு

காதுகள் இரண்டு
அழகுக்கா?
கழுதைக்குக்
காதுகள் நீளம்!

ஒலி கேட்டு
அனுபவிக்கத்தான்
காதுகள்.

மனிதனுக்கும்
மிருகத்துக்கும்
காதுகள் உண்டு.
பறவைக்கும்
காதுகள் உண்டோ?
படம் போட்டுப்
பார்த்தேன்.
அழகாயில்லை.

திரிபுரம் எரித்த
முக்கண்ணன் போல,
நண்பருக்கு
மூக்காது.
ஒன்று வலக்காது,
மற்றது இடக்காது,
இரண்டும்
கேட்காது.

—ம. ந. ராமசாமி

---

பட்டாற்போல் நடக்கும் அது. பெல் கிடையாது. அப்பா எப்போதும் தயாராகச் சற்று நீளமான இரும்புக்கோலை வைத்திருப்பதை இவன் பார்த்திருக்கிறான். அதன் மூலம் ஹேண்டில்பாரில் அடித்துச் சப்தமெழுப்புவார். மறந்த வேளைகளில் 'ஓரம் ஓரம்' 'ஸைக்கிள் ஸைக்கிள்' 'தள்ளுங்கோ தள்ளுங்கோ' என்று அவர் கத்துவதையும் பார்த்திருக்கிறான். ரொம்ப வேடிக்கையாய் இருக்கும் அது.

ஸைக்கிளில் எல்லாமே அலாதி. பிரேக் 'ட'ணா வளைவில் ஒடிந்து நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கும். இரண்டு பக்கமும் மட்காட் கிடையாது. பெடல் கிடையாது. பெடல் ஆக்ஸில் மட்டும் இருக்கும். இந்த அழகில் செயின் வேறு அடிக்கடி கழன்று விடும். இருந்தாலும் அப்பாவுக்கு அதில் உயிரான உயிர். அந்தச் சனியனைத் தலை முழுகச் சொல்லி அப்பாவுக்கும் அம்மாவுக்கும் தினம் நூறு சண்டை. பகல் முழுவதும் அம்மா மிகவும் அமைதியாக, இங்கிதமாக இருப்பாள். படுக்கப்போகும் போதுதான் அம்மா சரியாக ஆரம்பிப்பாள். அப்பா குழைவார். கெஞ்சுவார். ஸத்தியம் செய்வார். அம்மாவின் காலைப்பிடித்து அமுக்கி அமுக்கி, பரிதாபமாகப் பார்த்து 'மம்ஹூம்' என்று தலையைக் கோணுவார். வேண்டா வெறுப்பாக அம்மா உள்ளே போவாள்.

எல்லாம் அதோடு சரி. காலையில் அப்பா பழைய ஓட்டை ஸைக்கிள் அப்பாதான். அவனும் ஒரு சைக்கிள் கேட்டதுண்டு. ஒரு முறையல்ல. பலமுறை. S. S L. C. முடிய வேண்டுமாம். இல்லையென்றால் ஊர்சுத்தி ஆகிவிடுவானாம். கேட்டு இவனுக்கு அலுத்துவிட்டது. திண்ணையில் உட்கார்ந்தபடி சைக்கிளில் போகிற உடம்புகளையே ஏக்கத்துடன் பார்த்துக்கொண்டிருப்பான். எத்தனை உடம்புகள். தர்ப்பைக் கட்டு நிறைந்த பைஹேண்டில் பாரில் தொங்க, இடுப்பில் சைக்கிளைச் சாய்த்தாற்போல் நிறுத்திக்கொண்டு மணிக்கட்டுக்குக் கீழே வட்டமாகச் சற்று மழித்த கையால் பஞ்சாங்கத்தைத் தடவி நாள் சொல்லும் சாஸ்திரிகள், வேகத்தை மெதுவாக்கி, கைலி (வேஷ்டி அல்லபேண்ட்) பாருக்கு இருபுறமும் சரிய திடீரென்று நிறுத்தி ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டு குச்சியை மேலும் கீழுமாய் இரண்டு ஆட்டு ஆட்டி எறிந்து, பின்வாங்கி ஏறி மிதக்கும் யாரோ ஒருவன், குரங்குப் பெடலில் பறக்கும் பாச்சா, பாரில் பொருத்தியுள்ள சிறிய முன் ஸீட்டில் குழந்தையை அமர்த்தியபடி கறிகாய் வாங்கும் நடுத்தரக் கணவர், வேகவேகமாக வளைந்தும் நெளிந்தும் திடீரென்று தோன்றியும் வியூகங்களைப் பிளந்து கொண்டும் விரைந்து மறையும் நிழல் முகங்கள். எப்போதாவது பாரில்லாத உள் வளைந்த லேடி சைக்கிளில் போகும் பெண் முகங்கள்—எத்தனை விதம் விதமான சைக்கிள் முகங்கள், கால்கள், கைகள்.

இவனுக்கு அலுத்ததில்லை. சைக்கிளில் போகிறவர்களெல்லாம் இவனுடைய ஹீரோக்கள்தான். அவர்களைப் பேரதிருஷ்டக்காரர்களாகவும், எல்லாவற்றையும் அனுபவிக்கப் பிறந்தவர்களாகவும் நினைத்துக்கொள்வான். இவனுள் ஒருவேகம் பிறந்து சீறி வானவெளியைக் கீறிகொண்டு, பிரபஞ்ச வெளியைத் தாண்டி மறுபடியும் சரேலென மண்ணில் சரியும். என்ன வேகம்? அசுரவேகம். அப்படியும் முடியுமா? முடியும். முடியவேண்டும். வேகம். வேகம். ஒரே வேகம். எங்கேயும் நிற்கக் கூடாது, எதற்கும் நிற்கக்கூடாது.

அந்தக் கனவுகள். உள் அமிழல்கள். மிதப்புகள். சைக்கிளில் தொடைகள் இரண்

டும் அழுந்த அழுந்த உட்காருவதில் உள்ளூரக் குறுகுறுக்கிற ஒரு குஷி. பள்ளிக்கூடம் விட்டதும் வேகமாக மோதி விடுவதுபோல் அவளுக்கருகில் சடக்கென்றுஓடிக்கவேண்டும் சப்தம் இல்லாமல் பின்னால் நிறுத்தி அவளை அதிர அடிக்கவேண்டும். அந்த நீர்மின்னும் கண்களில் ஓடும் பயத்தையும் அதிர்ச்சியையும் ரசிக்கவேண்டும். அவளுடைய இங்கிதமான போலிக் கோபம் நிறைந்த உஷ்ணமான திட்டலில் கரையவேண்டும். டபிள்ஸில் அவளைப் பின்னிருத்திக்கொண்டு சடையான் குடிரோட்டில் போகவேண்டும்.

ரோடு குண்டும் குழி. குலுக்கல்.குலுக்கல் ஏற்றம். இறக்கம். தனி வேகம். 'பாத்துடா பாத்துடா. மெதுவாப் போடா பாவி சண்டாளா' சக்—அழுந்த திடீர் பிரேக். குலுங்கக் குலுங்கத் தழுவல். அம்மாடி இந்தச் சடையான் குடிரோடு வாழ்க. ஒருநாளாவது இன்றும் அந்த ரோட்டில் போனதில்லே. கனவு. திண்ணைக்கனவு. அம்மாவிடம் அடம் பிடித்து Hourcycle எடுத்திருக்கிறுன் முன்பெல்லாம். அரைமணிக்குப் பத்துக் காசு. நாயுடு கடையில் அந்த மூணும் நம்பர் பச்சை வண்டி இவனுக்கு ராசி. கடைக்காரனுக்கு இவனைக் கண்டால் ஏனே சைக்கிளைக் கொடுக்க மனம் வருவதில்லே.

'வேற ஆளவறச்சொல்லு தம்பி' என்றே 'வண்டி இல்லே' என்றே சொலலிவிடுகிறுன். பாச்சா போனுல் வாயை மூடிக்கொண்டு பவ்யமாகக் கொண்டு நிறுத்தி, ஸீட்டை இரண்டு தட்டு தட்டி, டயரை அமுக்கிப் பார்த்து 'இன்னுங்க பேரு' என்கிறுன். சைக்கிளை எடுத்துக்கொண்டு மதகடிக்குப் போவார்கள். செம்மண தரை. போக்குவரத்தே கிடையாது. மதகடிக்கு வந்ததும் பாச்சா 'ம் சரிடா' என்பான். ஒரு கையால் கேரியரைப் பிடித்துக் கொள்வான். ஹேண்டில் பாரைப் பிடிததபடி இடக்காலைப் பெடலில் வைத்து வலக்காலைப் பூமியில் விந்தி விந்தி ஏற முயல்வான் இவன். வண்டி நாலடி போய் அப்படியே வலபபுறம் சாயும். பிரேக் செம்மண் தரையில் கோடு இழுத்துச் செருகி நிற்கும். பின் சக்கரம் ஈயென்று இளித்தபடி சுற்றும். சில நேரங்களில் கம்மென நிருக்கும். பரிதாபமாக, சபிக்கப் பட்டவன்போல் பாச்சாவைப் பார்த்தபடி நிற்பான் இவன். பாச்சா தலையில் தலையில் அடித்துக்கொள்வான். 'ஒனக்குச் சொல்லிக் குடுக்கறத்துக்குள்ளே நேக்கு உசிரு போய் விடும் போலிருக்கு!' என்பான். ரொம்பவும் அலுத்துக் கொள்வான். பிகு பண்ணுவான்.

'சரிடா கோச்சிக்காதே. நீ ஒரு ரவுண்டு போய்ட்டுவா' என்பான் இவன். மறுபடியும் அதே முயற்சி. நெளிவு கையிலும் முட்டியிலும் சிராய்ப்பு. பாச்சா அபபடியில்லே. எல்லாம் செப்பிடு வித்தையாக இருக்கிறது. பெடலில் அவன் கால் வைத்தால் போதும். தேசிங்கு குதிரையாய்ப் பறக்கிறது. நிற்கச் சொல்கிற இடத்தில் நிற்கிறது. பார்க்கச் சொல்கிறவர்களைப் பார்க்கிறது. பாச்சா எல்லா வற்றிலுமே பலே ஆள். இவனை ஏற்றி உட்கார்த்தினல் ஆயிரம் நெளிவுகள். குறுக்கேயும், நெடுக்கேயும் குறியில்லாமல் செம்மண்ணில் கோணல் கோலங்கள் வரைவதில் சமர்த்தன்.

'நேரப் பார்ரு' 'இடுப்பெவளைக்காதடா' 'ஹேண்டில் பாரை நேரப்பிடிச்சிக்கோ' 'வளையாடாதேன்னு. இன்னும் பார்ரு ..' 'ஏண்டா இப்படி பொம்பிளை மாதிரி இடுப்பெ இடுப்பெ வளைக்கிறே?' வளையும் போதெல்லாம் பின்புறத்தில் ஓங்கி அறைவான் பாச்சா. சுரீரென்றும். பேசமுடியாது. அது ஒரு சந்தர்ப்பம் அவனுக்கு பழைய வன்மம் தீர. என்ன செய்து என்ன? வண்டி ஒழுங்காக இன்னும் நாலடி போனதில்லே. வளைகிறது சரிகிறது. பாச்சா கேரியரையும் ஒரு ஹேண்டில் பாரையும் பிடித்துக்கொண்டு வருகிற வரையில் நூல்பிடித்தாற்போல் நேர்க்கோட்டில் இயங்குகிறது. விட்டாலோ?

பாச்சா விட்டது தெரியாமல் விடுவான். அப்போதுதான் தைரியம் வருமாம். நாலடி போய், வளைந்து விழுந்து சிராய்த்துக் கொண்டதும். 'ரொம்ப தூரம் தனியாப் போய்ட்டேடா நீ' என்பான். பாச்சாவுக்குக் கமிஷனுக அடிக்கடி ரவுண்டுதர வேண்டும், அதில்இந்திர

---

## அக்ரகாரத்துக் கதவுகள்

எங்களூர் அக்ரகாரத்தில்
அதிசயங்கள் ஆயிரம் உண்டு
செம்மண் பட்டையிட்டு
செங்காவிச் செறிவிசசில்
கொலுவிருக்கும் வீடுகளின்
ஜென்னல்களுக்கோ
கதவுகளே இல்லே—
ஆனலும்
டொர்ரிகாட் பளபளப்பில்
குதிகால் நடையுயர்த்தி
நட்டநடுத் தெருவில்
நீள நடந்தால்
கறுப்பு சிவப்பு
பழுப்பு மாநிறப்
பர பரப்பு முகங்கள்
கதவுகளாய் முளைக்கும்.

—நா. விச்வநாதன்

ஜாலமெல்லாம் பண்ணுவான் அவன். பாவி. சொல்லிக் கொடுக்கிற சாக்கில் தானே ஓட்டித் தீர்த்து விடுவான். ஓடி ஓடி முட்டுத் தேய்ந்ததுதான் மிச்சம். மற்றபடி ஒரே திண்ணைக் கனவு.

எதிர் வீட்டுச் சைக்கிளை ஏக்கத்துடன் பார்த்தான். ராயர் அதன்மேல் உயிரையே வைத்திருக்கிறார். பெண்டாட்டியை விட அவருக்கு அதனிடம்தான் வாஞ்சை அதிகமாம். சைக்கிள் ஜம்மென்று ஸ்டாண்டில் நின்று கொண்டிருந்தது. அருகில் யாரும் இல்லை. இறங்கினான். அருகே போனான். அப்போதுதான் ராயர் துடைத்து விட்டுப் போயிருந்தார். பாரில் இவன் முகம் நீள வாட்டில் தெரிந்தது. முகத்தின் நடுப்பகுதிகள் பாரின் நடுப் பகுதியிலும் மற்ற பகுதிகள் பக்க வாட்டில் சரிந்தும் தெரிந்தன.

கண்ணாடியில் ஒரு உள்வட்டம். அதில் இவன் முகம் மட்டும் செரிந்தது. அதை ரசித்தான். முகத்தைக் கோணினான். 'ஈ' யென்று இளித்தான். குரங்கு போலப் பாவலா பண்ணினான். அதுவும் ஏமாற்ற வில்லை. நன்றியுடன் பிரதிபலித்தது. குஷன் ஸீட்டைத் தடவுகையில் அவளைப்பற்றிய ஏதோ ஒரு உணர்வில் சிலிர்த்தான். அதன் மெத்தென்ற தன்மை இவனுக்கு நிரம்பவும் பிடித்திருந்தது. கன்னததை வைத்து இழைத்துப் பார்த்தான். பூட்டைப் பார்த்தான். திறந்திருந்தது. வலது காலைக் கீழே ஊன்றி இடது பெடலில் இடக்காலை வைத்து இரண்டு கையாலும் ஹேண்ட்பாரைப் பிடித்தபடி வேகமாக அழுத்தினான். 'ரிர் ரிர் ரிர்' என்று பின் சக்கரம் சுத்திற்று.

---

## பரிணாமம்

நாலு வயதில்
நர்ஸரிக் கவிதையும்
பின்னர் சில நாள்
ஆத்திச் சூடியும்
கோனார் நோட்ஸில்
கம்பனும் கபிலனும்
படித்துக் குழம்பி
பாட்டு எழுத
பேப்பரும் பென்ஸிலும்
எடுத்த வேளை
குட்டிச் சுவராய்
போவாய் நீயென
பெற்றதுகளிடம்
பாட்டுக் கேட்டேன்'

—ஜரதுஷ்ட்ரன்

அதில் ஒரு குச்சியையாவது, காகிதத்தையாவது கொடுத்துப் பார்க்கவேண்டும் போலிருந்தது. சடக்கென்று பிரேக் போட்டான். 'சச்சக்' உயிர் போய் நின்றது. பெல்லில் கைபோயிற்று. அடிக்கப் போனான். யாராவது வந்து விட்டால் என்ன செய்வது என்று இடக்கையை இதன் குமிழ்வளைவில் பொத்தி அடித்தான். ஜீவனிழந்த அபஸ்வர ஒலி கேட்டது. திடீரென்று தோன்றிற்று. சுற்றும் முற்றும் பார்த்தான். யாரும் இலலை. ஸ்டாண்டை அகற்றினான். மெதுவாகத் திருப்பினான். ஏதோ ஒரு வேகம் உள்ளே உந்திற்று.

பெடலில் காலை வைத்து வலக்காலை விந்தினான். நிமிஷப்போது. அவனுக்கே ஆச்சர்யமாய் இருந்தது. முன் சக்கரம் இப்படியும் அலைந்துப் பின் நேரே சீறிற்று. மிதித்தான். கனவு வேகம் பீறிட மிதித்தான். வேகம். வேகம். அசுரவேகம். தெருக் குழந்தைகள் சிதறி ஓடின இரண்டொருவர் இவனை 'சொல்லிட்டு வந்துட்டானே' என்பதுபோல் பார்த்தனர். இவன் எதையும் சட்டை செய்யவில்லை. பாகீரதிமாமி போட்டிருந்த கோலத்தின் சதுரங்களில் விட்டான். கிளித்தட்டு நினைப்பு. ஒரு கண் சிமிட்டுப் போதில் தன் தெருவைத் தாண்டிவிட்டான். சந்நதித் தெருவிலிருந்து கீழத் தெருவிற்குத் திரும்பு கையில் குறுகிய வட்டத்துக்குள் திரும்பாமல் அதிக விஸ்தாரம் எடுத்துக்கொள்ளவே சுவரில் மோதப் போனான்.

அனிச்சையாக இயங்கி, நெளிந்து தப்பினான். திரும்புகையில் ஒரு பெரிய கல்லில் முன் சக்கரம் பாதி ஏறிவிடவே வழியின்றி அழுத்தி மிதித்தான். தூக்கிப்போட்டு, சற்று தேங்கி நின்று, ஆடி முன்னே போயிற்று வண்டி. கீழத்தெருவில் பாண்டி விளையாடிக் கொண்டிருந்த பெண் குழந்தைகளும், கோலி விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களும் இவனைப் பார்த்ததும் பின்னால் ஓடிவந்தன. இரைச்சல் கும்மாளி. கோண்டு ஓடிவந்து கேரியரைப் பிடித்தான். இவன் நெளிந்தான், கத்தினான்.

'டேய் ஒரு ரவுண்டுடா ஒரு ரண்வுடா' 'போடா விடுன்னாவிடு விடுர்ரா அன்னிக்கி நீ நாயுடு கடையில எடுத்தப்போ குடுத்தியோ பெரிசாப்பீத்திண்டியே' இவன் நிற்காமல் கத்திக் கொண்டே விரைந்தான். கோண்டு கறுவியபடி நின்றான். குழந்தைகளெல்லாம் அவனருகில் வந்து குழுமி நின்றன. பரிதாபமாகப்பார்த்தன. 'அடுத்த தரம்வரட்டும் காத்தப்புடுகிங்கி விட்டுரலாம்' என்றான் கோண்டு. இவன் இதை யொன்றும் பொருட்படுத்தாதவனாய் மேலே போனான்.

திடீரென்று துள்ளிவந்த பந்தைத் தூக்கிக் கொண்டு ஒரு சிறுவன் குறுக்கே ஓடினுன். அடிவயிற்றைக் கலக்கிற்று. ஒன்றும் ஓடவில்லை. கண்ணை இருட்டிற்று. கை எப்படியோ இயங்கிற்று. 'சனியனே பாத்து வரப்படாது? கழிசடை முண்டம், மொகரயப் பாரு' திட்டினுன். அதிர்ச்சியில் வண்டி திண நிற்று. ஒரு அரைவட்டத்தில் கோணிற்று. சரிந்தது. காலே ஊன்றிச் சமாளித்து மேலே போனுன். உடம்பு தெப்பலாக வியர்த்திருத்திருந்து வெடவெட வென்று நடுங்கிற்று. நாக்கு வரண்டது. கொஞ்சநேரம், கொஞ்சதூரம் வரை அந்தப்பையனை மனதுள் ஆபாசமாய்த் திட்டினுன். பெற்றவர்களை நடுரோட்டிற்கு இழுத்தான்.

மேலத்தெருவில் நடமாட்டம் இருந்தது. வளைந்தும் நெளிந்தும் விலகியும் மெதுவாகவும் போகவேண்டியிருந்தது. கோடு போட்டாப்போல் நேர்க்கோட்டில் இயங்காத ஜன மந்தைகள். அவர்களின் அசைவுகளும் நடைகளும், பார்வைகளும் இவனுக்கு எரிச்சலூட்டின. கோணல் மாணலான ஒழுங்கற்ற முகங்கள் இவனுக்கு அருவருப்பூட்டின. எதிரே சீறிவருகிறலாரி, பெல்லடிக்காமல் பின்னுல் வந்து முட்டிக் கொண்டு நிற்கிற சகதோழர், அப்படிப்போவோமா இப்படிப் போவாமா வென்று முடிவு செய்யாது திடீரென்று நடுரோட்டில் திசைமாறும் ஒற்றைமனிதன், விருக்விருக்கென்று குறுக்கேபோகும கூடைக்கார ஆண் பெண்கள், வாலே இப்படியும் அப்படியும் ஆட்டியபடி மந்த நடைபோடும் எருமைகள் கும்பல் கும்பலாய் தீடீரென்று அமையும் வியூகங்கள், நடைபாதைப் புழுக்கள், இவை இவன் எதிர் கொண்டாகவேண்டிய பிரச்சனைகளாக இருந்தன.

ஒவ்வொரு அடி முன்னேற்றத்திலும் அவன் பிரச்சினைகளை எதிர் கொள்ளவேண்டியிருந்தது எதிர்பார்த்து முன் எச்சரிக்கையுடன் திட்டத்துடன் இயங்கி முன்னேற வேண்டியிருந்தது. சில வேளைகளில் எதிர்பார்ப்புகளும், சுதாகரிப்பும் அடியோடு கைவிட்டன. கனவில்வரும் அந்தக் கருப்புக்கோட்டை நினைத்துக்கொண்டான். ஒவ்வொரு பிரச்சனைகளோடும் தான் முடிந்துபோனதாய்ப் பயந்து நடுங்கிமேலே போனுன். மணி அடித்தும் நகராத மந்தைகள் மேல் ஆத்திரம் வந்தது. கத்தினுன். தன்மேலேயே வெட்கமாகச் சிறுமையாக இருந்தது. ராயரானுல் என்ன, அப்பாவானுல் என்ன இந்தக் கூட்டத்தில் எல்லாமே ஒன்றுதான். திடீரென்று இவன் எதிர்பாராத நேரத்தில் எதிர் பாராத இடத்திலிருந்து ஒருவன் இவனைக் கடக்க முன்னிருந்து வந்தான். இவன் அதிர்ந்து போனுன்.

எதிரும்புதிரும். அவன் இடத்தில் திரும்பட்டும் என்று இவன் வலம்போனுன். அவனும் வலம்வந்தான். இடம்போனுல் இடம் வந்தான் இடமும் வலமும் மாறிமாறி சடுகுடு ஆடிறர்கள். இவன் தத்தளித்தான். கொஞ்ச ஆட்டத்திற்கு பிறகு பக்கத்திலிருந்த லைட் கம்பத்தைப் பிடித்துக் கொண்டான். இருவரும் ஒருவரை யொருவர் மௌனமாகப் பார்த்துக் கொண்டார்கள். அவன் சொன்னுன் "பாத்துவரப்படாது?" இவன் சொன்னுன்; 'பாத்து வரப்படாது', "நீதான் ராங்ஸைட்" 'நீதான் ராங்ஸைட், 'பெல்லடிக்கறத்துக்கு என்னய்யா?" காதுஎன்ன ரிப்பேரா?' "ஒங்கப்பன்வூட்டுரோடா?" 'ஒங்கப்பன் வீட்டுரோடா? "சர்தாம் போய்யா என்னமோ பெரிசாப் பேசவந்திட்டே" 'அடசர்தாம் போய்யா தெரியும்' "இப்பஎன்னய்யா செய்யனுங்கிறே?" 'இப்பநீ என்னய்யா செய்யனுங்கிறே?'. மறுபடியும் மௌனமானுர்கள், உம் மென்று பார்த்துக்கொண்டார்கள். பின் வாங்கி வெவ்வேறு திசையில் பரஸ்பரம் திட்டியபடி விந்தி முன்போனுர்கள்.

தெருவின் அமைப்பும், அதன் வளைவுகளும் கட்டாயங்களும் இவனுக்கு வெறுப்பூட்டின. கசந்தன. அவைகளால் தான் அமுக்கப்படுவதை, அதன் அமைப்புகளில்தான் அதுவாக நெளிய நேர்வதை வெறுத்தான். வெயில் முன்னும் பின்னும் வாட்டிற்று. கைகாலெல்லாம் பிசுபிசுத்தது. கண்கள் எரிந்தன. காற்றில் புழுதி வாரியடித்து அப்பியது. லாரியும், காரும், பஸ்ஸும் பெட்ரோல் புகையை முகத்தில் உமிழ்ந்தன. காரிலும், பஸ்ஸிலும் போகும் முகங்கள் இவனை விநோதமாக, விசித்திரமாக இளக்காரமாகப் பார்ப்பதாக உணர்ந்தான். அந்த உதடுகள் தனக்கு எதிராக எதையோ முணுமுணுப்பதாக நம்பினுன். தனித்தனியானதும், சேர்ந்ததுமான இனந்தெரியாத குழம்பிய ஒலிக்கலவைகள் கடூரமாய் மனச்செவியில் மோதின. சப்த அலைகள்மோதி உருத்தெரியாத மனிதப்பிண்டங்களாக உதிர்வதான மிரட்சியில் இவன் அதிர்ந்து குலுங்கினுன். தனியாக எல்லாவற்றையும் அறுத்துக் கொண்டு, இந்த ஆரவாரங்களிலிருந்து விலகித் தன்னிச்சையாய் இயங்கவேண்டும் போலிருந்தது.

## கேள்வி

இந்த மனிதக் கட்டையை எரிக்க
ஏன் மரக்கட்டையை அடுக்குறீர்?
அது செய்த பாவம் தான் என்ன?

—எஸ். கே. ஆத்மாநாம்

## பசி

பல்லின்றி நாக்கின்றி
பரத்திய உதடுகள் பிரித்து
சுருங்கா வயிறுகள் சரிய,
குடிசை வாசலில் வானம்
பார்த்தன பாணைச்சட்டிகள்

—மகாகணபதி

---

மதகடிக்கு விட்டான். மூன்றுமணி எதிர் வெயிலில் இந்த முனையிலிருந்து எதிர் முனைக்கு விட்டான். பின் வெய்யிலில் திரும்பினான். குஷியில் எதிரொலி கேட்க விரும்பினான். உரத்த குரலில் சுந்தரி ஈஈஈ என்று மீட்டினான். 'சுந்தரி ஈஈஈஈஈ' மிதந்தான்: பொங்கி சிலாகித்துத் தலையாட்டினான். ஒற்றை உயர்த்தடத்தில் போகப் பிரியப்பட்டான். கவனமாகப் பிசகாமல் கொஞ்சம் போனான். அதற்குள் தன் இயக்கம் ஒடுக்கப் படுவதை வெறுத்தான். வளைவும் நெளிவுமாய்க் குறுக்கும் நெடுக்குமாய்த் தறிகெட்டு ஒடினான். அதுவும் கசந்து மனது கூட்டத்தில் தாவிற்று.

அமைப்பும், ஏற்பாடுகளும் முறைகளும் அத்தியாவசியமானவையோ என்று நம்பினான். தனிமை நரகங்களைச் சிருஷ்டிக்கிறது எள்று கருதினான். நாலுஎருது சிங்கம் கதையை மனதில் ஒடவிட்டான். வேகவேகமாக ரோட்டுக்கு வந்து கூட்டத்தில் சங்கமித்தான். தன்னுடைய இயக்கம் தனித்து எல்லாவற்றிலிருந்தும் வேறுபட்டு பளிச் சென்று தெரிய விரும்பினான். சைக்கிளை, லாரியை ஸ்கூட்டரை முந்தினான். நான்முந்தி. எதிலும் எவற்றிலும் எப்படியும் நான்முந்தி நானே முந்தி, இந்த முன்பாய்ச்சலுக்குக் கோணலும், விளைவுகளும் நிறைந்த பலவழிகளில் இயங்க அவன் தயாராக இருந்தான். கிராஸிங்கில் வெள்ளை உடுப்புக்காரர் கையை நீட்டினார். ஒரு பேரியக்கம் ஒரு வெள்ளைக்கைக்குக் கட்டுப்படுவதும் மிகவும் கீழ்த்தரமாகப், பேடித்தனமாக இருந்தது இவனுக்கு. உடை, உடை. இவன் யார் நம்மை நிறுத்த, நம் வேகத்தை நிறுத்த.

தயங்காமல் மிதித்தான். விர்விர்விர் 'ஏய் ஏய் ஏய்' 'கத்தியது வெள்ளை உடுப்பு. இவன் மின்னலானான். குறுககுச் சந்தில் திரும்பினான். ஆப்பக்காரிமேல் மோதினான் 'மணி அடிச்சேனே காதுலவிழலே?' என்றான். 'சண்டாளப்பாவி' இடிச்சி எலும்பெ முறிச்சிப்பிட்டு நாயமா பேசறே நீ? நல்லாருப்பியா கழிச்சல்லபோவ. குளுவான்லபோவ, ஒன்னப் பாடலே அள்ளிண்டு பூட" இவன் நிற்கவில்லை. சந்தை வேகமாகத் தாண்டினான். வெகுநேரம் வரை தோளில் ஒருகை விழுவதாக உணர்ந்து நடுங்கினான். சாயபுத்தெருவிற்கு வந்திருந்தான். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் தண்ணீர் தேங்கியிருந்தது.

தண்ணீரைக் கண்டதும் அதில்விட்டான். இருபக்கமும் விசிறியாய் வாறி இரைத்தது நீரை. மண்ணில் சிதறிவிழுந்த நீர்த்துளிகள் முத்துமுத்தாய்க் கோத்துக் கொண்டன. இவனைக் கண்டதும் ஒரு சோனிநாய் குலைத்தபடி பாய்ந்துவந்தது. நாய்க்கும் இவனுக்கும் ஏழாம் பொருத்தம். அதனாலேயே இரவுக் காட்சிகளுக்கு இவன் அதிகம் போனதில்லை. கையை அசைக்கமுடியவில்லை. அதன்புறம் திரும்பவும் முடியவில்லை. 'சூ சூ சனியன்' காற்றில் உமிழ்ந்தான். சற்றுதூரம் இவனுடன் ஒடிவந்து, குலைத்து பிறகு தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டுபழையஇடத்தில் போய் சுருண்டுகொண்டது அதைவிட்டு வெகுதூரம் நகர்ந்ததும் அதன் கழுத்தில் விட்டிருக்கவேண்டும் என்று நினைத்தான். ஜீவஹிம்சை பாவம் அதனால்தான் விடவில்லை என்று சொல்லிக்கொண்டான்.

நடுத்தெருவைத் தாண்டியதும் யாரோ சொன்னார்கள் 'திமிரப்பாரு என்னவேகமாப் போறான் பாரு தலகால் தெரியாம, காலு கைய்ய ஒடிக்க. 'போடாசும்பா' மனதில் கருவிக் கொண்டே வண்டியை விரட்டினான். சந்நதித் தெருவில் நுழைந்ததும் எதிரேகுடத்துடன் அவள் வந்தாள். ஒருமின்னல் பார்வை. மோகனப் புன்னகை. இவன் எங்கோ அசுர வேகமாக உந்துவிசையுடன் தூக்கியெறியப் பட்டான். கையைவிட்டுப் பார்க்க நினைத்தான். பயமாக இருந்தது. எதிரே அவள். அவனுடைய அவள் விட்டான். 'எலேய் எலேய் டேய் டேய்' சைக்கிள் திரும்பி திசை மாறி எதிர்ச்சாரியில் ஏறிற்று. சுவரில்மோதி நின்றது. எல்லோரும் எழுந்து பதறிநின்றார்கள். சைக்கிள் ஒரு புறமும் இவன் ஒருபுறமும் விழுந்தார்கள். அறையில் நல்ல ஊமையடி. வசவுகள். அனுதாபங்கள். சைக்கிளைப் பார்த்தான்.

நல்லவேளை ஒன்றும் ஆகவில்லை முன் சக்கரமட்காடில் சில சிராய்ப்புகள் மெதுவாக தள்ளிக்கொண்டு வந்தான். கால் கெஞ்சிற்று எதிர் காற்றுச்சிராய்க்கச்சீறும் மனக்கனவு நிழலாடிற்று. பல்லைக்கடித்தான். முகம் கோணிற்று. தெருவுக்குவந்தான். தெரு அப்படியே இருந்தது. எதுவும் மாறியிருக்கவில்லை. அது அவனுக்கு எப்படியோவும் ஒரு உள்சிதைவாகவும் இருந்தது. ராயர் வீட்டில் எல்லோரும் உள்ளேயிருந்தார்கள். 'சைக்கிளை இருந்த இடத்தில் நிறுத்தினான். கசப்பும் சிறுமையும் மிதந்ததும் மனதில் ஏமாற்றமும், அதிருப்தியும் மேலிடப் பெருமூச்சு விட்டான். எட்டிஉதைத்தான் சைக்கிளை மிகவேகமாக, மனதுள் 'சைக்கிள் பெரியமயிருசைக்கிள்' முணுமுணுத்தான்.

திண்ணையில் வந்து சாதுவாய்க்காலைத் தொங்கப் போட்டபடி உட்கார்ந்தான். சைக்கிள் விடத் தெரியாமல் இருந்திருந்தால் எப்படி இருக்கும் என்று நினைக்கத் துவங்கினான்.

# ஒரு எழுத்தாளரும் ஒரு சோஷலிச அரசும்

**1942** தொடக்கத்தில் சீனுவிலுள்ள சுங்கியாங் தியேட்டரில் 'சியூ யுவான' என்ற நாடகம் நடந்த போது, அங்கு தினமும் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. வஞ்சகம், மாய்மாலம், துரோகத்தனம் முதலியவற்றைப் பலமுறை அனுபவித்திருந்த சீன மக்கள் தனது நாட்டு மக்களைக் காட்டிக் கொடுக்க மறுக்கிற, உயிரே போனாலும் தனது லட்சியங்களைக் கைவிடாதிருந்த அந்த நாடகத்தின் கதாநாயகனைப் புரிந்து கொண்டனர். போற்றிப் புகழ்ந்தனர். அந்தக் கதாநாயகன் விசுவாசம், தன்மானம், தைரியம் முதலியவற்றின் பிம்பமாக மக்களுக்குக் காட்சியளித்தான்.

ஆனால் அந்நாளில் அந்நாடகத்தைக் கண்டு களித்த மக்கள், அந்த நாடகாசிரியர் கோ மோ-ஜோ ஒரு ஆஸ்தான கவிஞராக மாறி முப்பதாண்டுக்காலத்துக்குள் தமது கதாநாயகனின் லட்சியங்களையெல்லாம் காட்டிக் கொடுத்துவிடுவார் என்றுகனவிலும் கருதியிருக்கமாட்டார்கள். உலகப் புகழ் பெற்ற கவிஞரும், அறிஞரும், சமாதான வீரருமான கோமோஜோ, தமது கடந்த காலத்தையே துறந்து விட்டு, சியூ யுவான் நாடகம் உள்ளிட்ட தமது படைப்புக்களையெல்லாம் மறுத்து விட்டு, சூழ்ச்சி மிக்க அரசியல்வாதியாக மாறி விடுவார் என்று எவருமே எண்ணியதில்லை.

ஆனால், 'கலாசாரப் புரட்சி'யின் போது 1966 ஏப்ரல் மாதத்தில் கோ மோ-ஜோவே கூறினர். "பல ஆண்டுக் காலத்தில் நான் பல நூல்களை எழுதியுள்ளேன். ஆயினும் இன்றைய அளவுகோல்களின் மூலம் அவற்றை அளந்து பார்த்தால், நான் இன்று வரை எழுதியவை அத்தனையையும் சுட்டுச் சாம்பலாக்க வேண்டியதுதான்."

கோ மோ-ஜோ தாம் நிரபராதி என்று எவ்வளவோ கூறிய போதிலும் மாவோவின் 'கலாசாரப் புரட்சி'யைச் சேர்ந்த வாலிபர்கள் அவரைப் பிற்போக்கு எழுத்தாளர் என்றே கூறினர்; அவரது குற்றங்களை அம்பலப் படுத்தவேண்டும் என்றும் கோரினர். இதனால் பயந்து போன கோமோ-ஜோ தமமிடம் மிஞ்சியிருந்த கொள்கைகளையும் தாமே தவறு என்று ஒப்புக் கொண்டு தமது விசுவாசத்தை நிரூபித்துக் காட்ட முயன்ருர். கூட்டங்களில் எல்லாம் அவர் 'மாபெரும் பாட்டாளி வர்க்கக் கலாசாரப் புரட்சி,யைப் போற்றிப் புகழ்ந்தார். 'மாபெரும் வழிகாட்டி'யான மாசேதுங்குக்குத் துதி பாடினர்.

ஒரு காலத்தில் தம்மை சோவியத் யூனியனின் உண்மையான நண்பரெனக் கூறிக் கொண்ட கோ மோ—ஜோ, 1967 இல் சோவியத் யூனியனைத் தாக்கிப்பேசினர்; மாவோயிசத்தில் தமக்குள்ள விசுவாசத்தை மேலும் நிரூபிப்பதற்காக சோவியத் மக்கள் 'திருத்தல்வாதிக'ளாகி விட்டனர் என்று குற்றம் சாட்டினர். எனினும்கூட, பீகிங் தலைவர்கள் அவரை முழுமையாக நம்பிவிட வில்லை. அடுத்த ஆண்டில் அதாவது 1968 வரையிலும், அவர்கள் அவரைச் சிறு கூட்டங்களில் பேச மட்டுமே அனுமதித்தனர்.

ஒன்றரை ஆண்டுகட்குப் பின்னர் தான் அவருக்கு நல்ல காலம் பிறந்தது. கோமோ ஜோவின் பெயர் பத்திரிகைகளில் வாரம் தவருமல், சமயங்களில் நாள் தவருமல் தென் படத் தொடங்கியது. இப்போதே அவர் வரவேற்புக் கூட்டங்களிலும், பெருங் கூட்டங்களிலும் சிறப்பு விருந்தினரோடு நடக்கும் கூட்டங்களிலும், வானொலியிலும் பேசுகிருர். மேலும் அவருக்குப் பல பதவிகளும் கிட்டி விட்டன. தேசிய மக்கள் காங்கிரசின் நிரந்தரக் கமிட்டியின் துணைத் தலைவர், (சட்டமியற்றும் உயர் மட்ட உறுப்பான இந்தக் கமிட்டி பல ஆண்டுகளாகக் கூட்டப்பட வில்லை) அகில சீன கலை இலக்கிய ஊழியர்கள் கழகத்தின் தலைவர் (இந்தக் கழகத்தின் உறுப்பினர்கள் பலரும் கலாசாரப் புரட்சிக்குப் பலியாகி விட்டனர்!) விஞ்ஞானப் பேரவையின் தலைவர் இந்தப் பேரவையின் விஞ்ஞானிகள் பலரும் 'மே 7 பள்ளிகளுக்கு' அனுப்பப் பட்டு விட்டனர்) முதலிய பதவிகளே அவை!

ஏன், என்ன நடந்து விட்டது? கோமோ-ஜோ என்ற கவிஞர் எச்சரித்த பலவீனங்களுக்கு, கோமோ-ஜோ என்ற மனிதர் பலியாகி விட்டார். கோமோ-ஜோ என்ற மனிதர் பட்டம் பதவிகளைப் பெரிதாக மதித்து, தமது மனச்சாட்சியை அவற்றுக்கு அடகு வைத்து விட்டார். அவர் தமது சொந்தப் பாதுகாப்பை உத்தேசித்து, மார்க்சியத்தை

மறுத்து விட்டு மாவோயிசத்தை ஏற்றுக் கொண்டு விட்டார். அதன் மூலம் கவிஞர் என்ற முறையிலும் அவர் தமக்குத் தாமே அழிவைத் தேடிக் கொண்டார்; ஏனெனில் கலை, கலாசாரம், விஞ்ஞானம் முதலியவற்றுக்கும் மாவோயிசத்துக்கும் சம்பந்தமேயில்லை.

கோமோ-ஜோ மீண்டும் பரிதாபகரமான முறையில் ஒரு கவிஞராகக்காட்சியளிக்க முன் வந்திருக்கிறார். அண்மையில் அவர் எழுதிய பிரபலமான கவிதைகளில் ஒன்றின் தலைப்பு 'ஆறு ரத்ததால் சிவந்திருக்கிறது' என்பதாகும். அதில் கவிதையைக் காணோம். ஆனால் ஏராளமான கோஷங்கள் உள்ளன; செவ்வொளியால் பிரபஞ்சத்தை ஒளி பெறச் செய்யும் மாவோவின் மாபெரும் நூல்கள் காட்டிய வழியில் செல்லுங்கள் என்ற அறைகூவலும் அதில் உள்ளது'

வெகுகாலத்திற்குப்பின்னர் கோ-மோ-ஜோ ஓர் அறிஞராகவும் காட்சி தரமுன் வந்து விட்டார். இந்த ஆண்டு பிப்ரவரி மாதத்தில் அவர் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அது 1969 ஆம் ஆண்டில் சிங்கியாங் உகுர் சுயாட்சி பிரதேசத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு ஏட்டைப் பற்றியதாகும். அந்த ஏடு 710 ஆம் ஆண்டைச் சேர்ந்ததாகும். அந்த ஏட்டை எழுதியது போதிய எழுத்தறிவற்ற ஒரு சிறுவனாகும். அதன் வாசகத்தில் பல பிழைகள் உள்ளன. பல எழுத்துக்களைப் புரிந்து கொள்வதும் சிரமம். எனினும் கோ மோ—ஜோ என்ன செய்தார்? அந்த ஏடு சீன மொழியில் எழுதப்பட்டிருப்பதால், சீன மொழியே அந்தப் பிரதேசத்தில் 7-8 ஆம் நூற்றுண்டுகளில் செல்வாக்கோடு இருந்திருக்கிறது என்றும், அதன் வாசகம் தப்பும் தவறுமாக தொடர்பிழந்து இருப்பதால், அதனை எழுதிய சிறுவன் வசதி படைத்த மேட்டுக் குடிமகனல்ல என்றும், மாருக ஒரு சாதாரணக் குடிமகனே என்றும் அவர் முடிவு கட்டி விட்டார். அதாவது அந்தப் பிரதேசத்து மக்களிற் பெரும்பாலோர் சீன இனத்தவரே என்பதுதான் அவர்கண்ட முடிவு. எனவே, சிங்கியாங் பூர்வாரம்பத்திலேயே சீனப் பிரதேசமாகவே இருந்துள்ளது என்பதும், அது எவ்விதத்திலும் உகுர்கள், கஜாக்குகள் முதலிய அயலாரின் தாயகம் ஆகாது என்பது தான் அவரது கணிப்பு.

கோ மோ—ஜோவின் இந்தக் கணிப்பின் படி பார்த்தால், புராதன கால எகிப்து நாட்டை எகிப்தியர்கள் ஆளவில்லை என்றும், ஆரியர்களே ஆண்டனர் என்றும், ஏனெனில் பாரோக்களின் கல்லறைகளில் செம்பட்டை மயிர் கொண்ட பிரேதங்கள் இருந்தன என்றும் நாம் கூறி விடலாம். அதேபோல் வேதங்களை எஸ்கிமோக்களே எழுதினர், ஏனெனில் வேதங்களில் ஆர்க்டிக் பிரதேசத்தின் நெடிய இரவுகளையும் பகலையும் பற்றிய பல குறிப்புக்கள் உள்ளன என்றும் நாம் கூறி விடலாம்.

கோமோ—ஜோ போன்ற பெருங் கவிஞர் நாடகாசிரியர், அறிஞர் இந்த அளவுக்குத தாழ்ந்து தரங்கெட்டுப் போய் விட்டதைக் காண வருத்தமாகத்தான் இருக்கிறது. உண்மையில் நடந்ததென்ன? சீன அறிவாளி வர்க்கத்தைச் சீர்குலைத்து அவர்களது சிருஷ்டி சக்தியை ஒடுக்கி அவர்களைச் சொன்னதைச் செய்யும் கருவிகளாக மாற்றவும், மாவோவின் சிந்தனையை முழக்கமிடும் கிளிப்பிள்ளைகளாக மாற்றவும் மாவோயிஸ்டுகள் செய்த முயற்சிகளுக்குச் சிலர் பலியாயினர், மாவோயிஸ்டுகளின் கைப்பாவைகளாக மாறிவிட்டனர். வருகிற நவம்பர் மாதத்தோடு எழுபதாவது ஆண்டை எட்டிப்பிடிக்கவிருக்கும் கோமோ—ஜோவுக்கும் இதுதான் நடந்தது.

(உதவி : சோவியத் செய்தி)

---

## இதயவீணை தூங்கும்போது

பேசும் பாரென் கிளியென்றுன்
கூண்டைக் காட்டி வாலில்லை
வீசிப் பறக்க சிறகில்லை
வானம் கைப்பட வழியில்லை
பேசும் இப்போது பேசுமென
மீண்டும் மீண்டும் அவன் சொல்ல
பறவையென்றால் பறப்பதெனும்
பாடம் முதலில் படியென்றேன்.

## கைதியின் குழந்தை

கூண்டுக் கிளிகள்
காதலில் பிறந்த
குஞ்சுக் கிளிக்கு
எப்படி—எதற்கு
வந்தன சிறகுகள்

## கோடை

நாணல் முளைத்த
தண்ணீர் கரை நனைத்து
நதியெல்லாம்
மணல் பாய—
குளித்துக் கரையேறும்
கல் மலர்கள்.

—கல்யாண்ஜி

# இலக்கிய விசாரம்

'கசடதபற' ஜுலை '72 ஏட்டில் வெளியான ஒரு மதிப்புரையின் விளைவோ என்று சந்தேகிக்கத் தூண்டும்படி இருக்கிறது, 'இலக்கிய விசாரம்' என்ற பெயரில் சி. சு. செல்லப்பா வெளியிட்டுள்ள பதினாறு பக்கத்துண்டுப் பிரசுரம். இத்துண்டுப் பிரசுரத்தால் தாக்கப்பட்டுள்ள மேற்படி மதிப்புரையாசிரியனான அடியேனது புனைப்பெயர்களையெல்லாம் உலகறியச் செய்த சி. சு. செவுக்குநன்றி. இருபது வயதளவில் எழுத்துலகில் காலடி எடுத்து வைத்தபோது அடக்கத்தோடுதான் நான் இயங்க ஆரம்பித்திருந்தேன் என்பதை அக்காலத்திய எனது கடிதங்களை மேற்கோள் காட்டி நிரூபித்திருக்கிறார். அதற்கும் நன்றி.

'எழுத்து' பத்திரிகையில் நான் எழுதிய காலத்தில் சில முதல் வருஷங்களில் அங்கீகரித்த ஆசிரியர்களைத் தொடர்ந்து அதே பத்திரிகையில் என்கட்டுரைகளில் சூசகமாகப்பின் தள்ளிவிட்டேன் சிறுகதைத் துறையில் மௌனி, புதுமைப்பித்தன், லா. ச. ராமாமிருதம், ந. பிச்சமூர்த்தி ஆகியோருக்கு மட்டும் முக்கியத்துவம் தந்துதான் எழுதியுள்ளேன். இப்போதோ ந. பிச்சமூர்த்தி ஒரு மேஜர் கவி என்கிற கவிஸ்தானத்தையே புனர்விசாரணை செய்ய வேண்டிய அவசியம் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. இது 'கசடதபற' காரர்களின் திருப்திக்காகச் சொல்லப் பட்டதல்ல. 'கசடதபற' வுடன் நெருங்கிய கவிஞர்கள் ஓரிருவரைப்பற்றி நேர்ப்பேச்சில் நான் சொல்லிவரும் அபிப்பிராயங்களைக் கொண்டு பார்த்தால் செல்லப்பா சொல்வதுபோல் அவர்களுக்கு அனுசரணையாக நான் இயங்குவதாகத் தோன்றவில்லை. அப்படி அகப்பட்ட பத்திரிகைக்கு அநுசரணையாக எழுதுபவனாக இருந்தால் 'பார்வை'க்கு அப்படியா மதிப்புரை எழுதியிருப்பேன்? 'பார்வை'யை அநுசரிப்பதன் மூலம் புத்தக வடிவம் பெற முயன்றிருப்பேனே! அதுவும் ''எழுத்து'வில் பிறந்தவன்'' என்ற பர்த் சர்டிபிகேட்டுடன்!

'நடை'யை 'எழுத்து' பத்திரிகையில் எழுதியவர்கள் நடத்தியதற்காக மட்டுமே மதித்துக் குறிப்பிடும் செல்லப்பாவுக்கு, 'கச்சடா தவறு' என்றெல்லாம் நடைபாதைத்தனமாக 'இலக்கிய விசார'த்திலேயே அழகு காட்டி எழுதுமளவுக்கு வேப்பங்காயாக இருக்கிறது 'கசடதபற'. காரணம் 'கசடதபற' சம்பந்தப்பட்ட நா. கிருஷ்ணமூர்த்தி, ராமகிருஷ்ணன், மஹாகணபதி, ஆகிய எவருமே ''எழுத்துவில் பிறந்த'' அதிர்ஷ்டத்தைப் பெறாததாலோ?

'கசடதபற'வில் ராமகிருஷ்ணன் கதையான 'மழைக்காகக் காத்திருந்தவன்', சேதுராமனின் 'இழப்பு' ஆகியவற்றை சி. சு. செ. யின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன். ந. சி. சு. வின் எழுத்துடன் இப்புதியவர்களை ஒப்பிடட்டும். ஆனால் செல்லப்பாவினால் இப்புதிய கதைகளின் தாரதம்மியத்தை உணர முடியுமா என்பதுசந்தேகம். ஏதோ 'டுவிஸ்ட்' 'கிவிஸ்ட்' என்றெல்லாம் உளுத்துப்போன ஓ' ஹென்றி தந்திரங்களைப் பற்றித்தான் இப்போதும் எழுதிக் கொண்டிருக்கிறார். இலக்கிய சிருஷ்டி ஒரு தடவை மட்டும் படிக்கப் படுவதற்கல்ல என்ற அடிப்படையில் பார்த்தால் இந்த 'டுவிஸ்டு' கள் எல்லாம் வியாபாரத் தனமான எழுத்தைச் சார்ந்தவை என்று தெரியவரும். கசடதபறவின் கதைக்காரர்களில் எவரும் இந்தத் தன்மையை மதிக்காதவர்கள் என்பது ஒரு ஆரோக்கியத்தின் அறிகுறி.

ராமகிருஷ்ணனையும் சேதுராமனையும் அடையாளம் காண செல்லப்பாவினால் முடியுமா என்ற என் சந்தேகத்துக்குக் காரணங்கள் இருக்கின்றன. அவர் குறிப்பிடும் என் கடிதங்களை நான் எழுதிய பிறகு சென்னைக்கு வந்து நேரில் அவரையும் 'எழுத்து' செயல் முறையையும் பார்த்த போது, 'எழுத்து' பத்திரிகையின் மறைமுக சக்தியாக ந. பிச்சமூர்த்தி இருந்து வருவதை அறிந்தேன். என்னுடைய கவிதைகளைத் தேர்ந்தெடுத்தவர் ந. பிச்சமூர்த்திதான். ந முத்துசாமியின் 'கற்பனை அரண்' என்ற அற்புதமான சிறுகதையை சி. சு. செ. தாமாக தரமுணர்ந்து பிரசுரிக்கவில்லை. ந. பிச்சமூர்த்தி அதன் மதிப்பை சி. சு. செ. வுக்கு உணர்த்திய பின்பே அவர் அதைப் பிரசுரித்திருக்கிறார். மௌனி விஷயத்திலும் க. நா. சுப்ரமண்யத்தின் ரசனையைத்தான் சி. சு. செ. பின்பற்றினார் என்பது க. நா. சு, சி. சு. செ. தொடர்புகளை அறிந்தவர்களுக்கு எளிதில் தெரியும். இவற்றிலிருந்து, மெய் இலக்கியத்தின் ஆத்மாவைத் தாமாக உணர்வதைவிட ''விமர்சனம் எழுதும்'' காரியத்தில்தான் செல்லப்பா தீவிரம் காட்டுகிறார் என்பது தெரிகிறது.

என் ரசனையின் நோக்கம் எப்போதோ 'நல்ல எழுத்தாளன்' என்று நான் சொன்னவரைப் பற்றியே நச்சு நச்சென்று புனர் விசாரணை செய்யாமல் கௌரவிப்பது அல்ல. ந. சி. சு, செல்லப்பா போன்றோரைப் படிப்பதிலிருந்து விடுபட்டு மௌனியை உணர்ந்திருப்பதும், இப்போது பிறந்துள்ள ராமகிருஷ்ணன் சேதுராமன் ஆகியோரைக் குறிப்பிடுவதும் வீழ்ச்சியல்ல. வளர்ச்சியையும் விழிப்பையுமே குறிக்கிறது என நினைக்கிறேன். நா. பார்த்தசாரதியை ரசித்தல், சுஜாதாவைக் குறிப்பிடுதல் ஆகிய காரியங்களை இப்போது நான் செய்தால்தான் சி.சு.செ. என்னைப் பழுக்காமல் வெம்பிப்போனவன்என்பது சரியாகும்.

போகட்டும். ராஜமையர் வழிபாட்டுக்காரரான செல்லப்பாவின் வேலை அவருக்கு விழா எடுத்து பூஜை பண்ணுவதோடு சரிதானா? அவரைத் தாக்கி எழுதப்பட்ட வரிகளுள் ஒன்றுக்காவது பதில் இல்லையா?

—டி. ஏ. சீவராம்

# அக்கம் பக்கம்

தமிழ் இலக்கிய வாசகர் பேரவையின் 1969 — 71ல் வெளியான சிறந்த தமிழ்ப் படைப்பிலக்கியத் தேர்வுக் கருத்தரங்கம் 16 — 7 — 72 அன்று நடந்தது. மதிப்பீட்டிற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்கள்:

சாயாவனம் (சா. கந்தசாமி); தந்திர பூமி (இந்திரா பார்த்தசாரதி); சில நேரங்களில் சில மனிதர்கள் (ஜெயகாந்தன்); பின்னணி (சிறு கதைத் தொகுப்பு); வாழ்விலே ஒரு முறை (அசோகமித்திரன்) கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள் (மீரா); கறுப்பு மலர்கள் (நா. காமராசன்); உதய நிழல்கள் (எஸ். வைதீஸ்வரன்); ஞானமாவிகா (கண்ணதாசன்).

தேர்ந்தெடுக்கப்பட்ட மேற்படி புத்தகங்களுக்கு வெ. சாமிநாதனும், வல்லிக்கண்ணனும் தேர்ந்தெடுக்கப்பட்ட மதிப்பீட்டாளர்கள். இருவருமே இந்த ஒன்பது புத்தகங்களில் சிலவற்றைப் படிக்கவில்லை என்பது விசேஷமான அம்சம்.

நடுவர் குழுவில் ஐந்து பேர்கள். ஆனால் அவர்கள் எந்தப் புத்தகத்தையும் தேர்ந்தெடுக்காமல் கூட்டத்திற்கு வந்திருந்தவர்களிடம் தேர்வுக்கு விட்டு, அதிகமானவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜெயகாந்தனையும், நா. காமராசனையும் சிறந்த படைப்பாளிகளாக ஒப்புக்கொண்டார்கள். இப்படிச் செய்வதால் கூட்டத்திற்கு வந்துவிட்ட காரணம் ஒன்றிற்காகவே புத்தகத்தைப் படித்திராமல் கூட தங்களுடைய அபிமான எழுத்தாளரின் படைப்பைத் தேர்வு செய்ய வாய்ப்புண்டு என்பதையும் மறந்துவிடக்கூடாது.

தனிப்பட்ட நபர்கள் பணம் கொடுத்துப் புததகம் வாங்கும் வழக்கம் தோன்றி ஆயிரம் பிரதிகள் ஒரு வருஷத்திற்குள்ளாவது விற்கும் நிலைமை வராத வரையில் எதை, எப்படி, எப்பொழுது, எங்கே, யார் தேர்ந்தெடுத்தாலும் எல்லாம் ஒன்றுதான்.

∴ ∴ ∴

சி.சு. செல்லப்பா இதுவரை நமக்கு ஒரு நாவலாசிரியராக, சிறுகதையாசிரியராக, புதுக் கவிதைக்காரராக, விமர்சனக் கட்டுரையாளராக, புத்தகப் பதிப்பாளராக, பத்திரிகையாசிரியராக இருந்தார். இப்பொழுது தாக்குதல் விவகாரத்தில் தன்னை ஐக்கியப்படுததிக் கொண்டுவிட்டவராகக் காண்கிறோம்.

"பயிர் வளருமுன் களை வளர்ந்து பயிருக்கே ஊனம் விளைவிப்பதைப்போல இவ்விதக் கருத்துக்கள் எதிர்கால இலக்கியவளர்ச்சிக்குக் குந்தகமாக இருக்கும் என்பதால் எதிர்த்தாக்குதல் தேவைப்படுகிறது"—இலக்கிய விசாரம் துண்டுப் பிரசுரத்தில் சி. சு. செ. வின் வார்த்தைகள் இவை.

எந்த ஒரு விஷயத்தையும் ஆதாரபூர்வமாக, தர்க்க ரீதியாக மறுப்பதும், ஒப்புவதும் தான் சரி. அதை விட்டு விட்டு 'கசடதபற' என்பதை 'கச்சடா தவறு' என்று வார்த்தைகளை வைத்துக் கொண்டு கிண்டல் செய்வது செய்பவரின் தரத்தையே மற்றவர்களுக்குக் காட்டும். மணிவிழா வயதை எட்டிவிட்ட மணிக்கொடிப்பரம்பரை படைப்பாளியான சி. சு. செல்லப்பாவிடமிருந்து இலக்கியப் பிரக்ஞையுள்ள எவரும் இப்படிப்பட்ட கிண்டல்களை எதிர்பார்க்கமாட்டார்கள்.

"மலிவான விளம்பரத்துக்கு ஆசைப்பட்டு எழுதுவது இலக்கியத்துக்கு, காசுக்கு உதவாது"— சி. சு. செல்லப்பா.

இதற்குமேல் என்னுடைய வார்த்தைகள் தேவையில்லை. என்று நம்புகிறேன்.

∴ ∴ ∴

இது 'கசடதபற'வின் 24-ம் இதழ். இரண்டாண்டுகள் முடிகின்றன. முந்திய ஆண்டின் 192 பக்கங்களோடு இதுவரை 404 பக்கங்கள் தரப்பட்டுள்ளன. எல்லாருடைய ஒத்துழைப்பாலும் இந்தக் கணிசமான பக்கங்களில் இக்கால கட்டத்தின் இலக்கிய வளர்ச்சியை ஓரளவிற்கு திருப்தியாக கோடிகாட்ட முடிந்துள்ளது.

மூன்றுவது ஆண்டில் சந்தாவை அதிகப்படுத்தக் கூடாது என்று எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. இனி 'கசடதபற'வின் ஆண்டுச்சந்தா ரூ 4/-. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஆர்வமுள்ள வாசகர்கள் இந்த உயர்வை ஒரு பொருட்டாகக் கருதமாட்டார்கள். தங்களின் முழு ஒத்துழைப்பையும் 'கசடதபற'வுக்குத் தருமாறு வேண்டுகிறேன்.

அடுத்த இதழ் கூடுதலான பக்கங்களோடு வெளிவரும்.

—நா. கிருஷ்ணமூர்த்தி

## வாசகர் வட்டத்தின் 1972-ஆம் ஆண்டு வெளியீடுகள்

**இந்திய ஓவியம்**

எம். எஸ். ராமசாமி — ரூ. 6-00

**அறிவின் அறுவடை**

லெஸ்டர் பிரௌன்

தமிழாக்கம் : சிட்டி — ரூ. 6-00

**கடலோடி**

நரசய்யா — ரூ. 5-25

**கலைக்கடலும் கருங்கடலும்** (அச்சில்)

தி. ஜானகிராமன்

---


**வாசகர் வட்டம்**

14, தணிகாசலம் செட்டிரோடு, சென்னை-17.

## காலைப் புத்துணர்வு மனமகிழும் மணிக்கணக்கில் நிலைத்திருக்க



குளித்த பிறகு பாண்ட்ஸ் ட்ரீம் ஃபிளவர் டால்க்! இதன் நீங்கா நறுமணம்...ஈரம் இழுக்கும் தன்மை... நாளெல்லாம் நிலைத்திருக்கும் காலைப் புத்துணர்வின் சுகம் — இவை யாவரையும் உங்களிடம் ஈர்க்கும்.

கோடையானாலும் இறுக்கமானாலும் நறுமணமுள்ள புதுமைப் பொலிவில், குளுமை உணர்வில் உங்களைத் திகழ வைக்கும். எக்காலத்துக்கும் ஏற்ற பாண்ட்ஸ் ட்ரீம் ஃபிளவர் டால்க் இந்தியாவிலேயே அதிக விற்பனையாகும் டால்க்.




## பாண்ட்ஸ்

ட்ரீம் ஃபிளவர் டால்க்

சொகுசான சுகமளிக்கும் மிருதுவான டால்க்

சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடெட்,
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏயில் இணைக்கப்பட்டது)

P.6922

Published by N. Mahaaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.